

ஓவியம் : ஆர். வரதராஜன்

# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு ஜுன் 1972 30 காசு **21**

# கயிற்றரவு

நகுலன்

சிவன், சாரதி, நான்—நாங்கள் மூவரும் பூதப்பாண்டியிலிருந்து சாரதி வீட்டில் இருந்து இறங்கியதும் மணி 4.30. இவனும் நானும் நாகர்கோவில் சென்று அங்கிருந்து திருவனந்தபுரத்திற்குப் பஸ் ஏறவேண்டும். தெருவில் நின்றுகொண்டிருந்தோம்.

ஒரு பஸ். அதன்பின் இன்னொன்று. பிறகு குருவியும் நெல்லும் என்ற கணக்கில் ஒவ்வொன்றாக ஒன்றின்பின் ஒன்றாக. ஒவ்வொன்றிலும் பிரயாணிகள் உட்கார்ந்து கொண்டும் நின்று கொண்டும் பஸ்ஸின் படியில் தொற்றிக்கொண்டும் போய்க்கொண்டிருந்தார்கள். நாங்கள் நின்று கொண்டே இருந்தோம். (காலம் காலமாக—நினைவிருக்கிறதா-முத்துசுவாமியின் நாடகம்-இதைத்தான் செய்து கொண்டிருக்கிறோம்-இனியும் இதைத்தான் செய்வோம்-கட்டுண்டோம்-காத்திருந்தோம்-காலம் மாறப்போவதுமில்லை நாம் காத்து நின்றுகொண்டே இருப்பதும் முடியப்போவதில்லை) பஸ்கள் முன்போல் ஒவ்வொன்றாக ஒன்றின்பின் ஒன்றாக போய்க்கொண்டே இருந்தன. சூரியன் சாய்ந்து கொண்டிருந்தான். நான் சிவன் முகத்தைப் பார்த்தேன்; சிவன் என் முகத்தை; திடீரென்று சாரதி என்னிடம் "அடுத்த ஸ்டாப்பிற்குப் போய் நின்று பார்க்கலாம்" என்றான். நாங்கள் ஆமோதித்தோம். எங்கள் முன் நாகர்கோவில் செல்லும் பாதை ஒரே திசையில் கண்ணுக்கெட்டும் தூரம் வரையில் "வளைந்து வளைந்து வளைந்து" சென்று கொண்டிருந்தது. அடுத்த ஸ்டாப்.

நான் வெற்றிலை போட்டேன்; சிவன் பீடி குடித்தான்; சாரதி சிகரெட். பிறகு பேசினோம் காத்திருந்து பேசிப் பேசிப் பேசிப் பொழுது சாயச்சாய முன்போலவே பஸ்கள் ஒவ்வொன்றாக ஒன்றின் பின் ஒன்றாகப் போய்க் கொண்டிருந்தன. காலம் காலமாக; எங்கள் முன் நாகர்கோவில் செல்லும் பாதை கண்ணுக்கெட்டும் தூரம்வரை "வளைந்து வளைந்து வளைந்து" சென்று கொண்டிருந்தது. இப்பொழுது இருள் மெல்லெனப் பரவியது. இப்பொழுது சாரதி "அடுத்த ஸ்டாப்" என்றதும் சரியென்றோம். அங்கும் நின்று கொண்டும் பேசிக்கொண்டும் காத்திருந்தோம்; பஸ்களும் முன்போல் ஒவ்வொன்றாக ஒன்றின் பின் ஒன்றாகப் போய்க்கொண்டிருந்தன. இப்பொழுது இருட்டு கனத்துக்கொண்டிருந்தது. மணி 6-30. இப்பொழுது சாரதி "அடுத்த ஸ்டாப்" என்றான். "சரி" என்றோம்.

காலையில் நாகர்கோவில் இறங்கியதும் சிவன் ஒரு சுபகாரியமாக என்னை நிறுத்தி விட்டு ஒரு தடவை சாராயம் குடித்துவிட்டு வந்தவன் "திருவனந்தபுரத்தைவிடத் தூரம் குறைவு" என்றான். இப்பொழுது அவனுக்குக் கள் வேண்டும். சாரதி அவனைத் தொட்டுக் கடையிருக்கும் திசைகாட்ட அவன் எங்களை நோக்கி "நீங்கள் இருங்கள்; நான் வந்து விடுகிறேன்" என்றான். சீக்கிரமே வந்து விட்டான். எங்களிடம் உதட்டைப் பிதுக்கினான். அப்பொழுது ஒரு பஸ் எங்களைத் தாண்டிச் சென்றது: பஸ் முழுவதும் ஜனங்கள் மொய்த்துக்கொண்டிருந்தார்கள்.

இப்பொழுது நான் "அடுத்த ஸ்டாப்" என்றேன். அவர்கள் ஆமோதித்தார்கள். மீண்டும் நடந்தோம்; நடந்துகொண்டே இருந்தோம்; வழியில் ஒரு கடை; ஒருவன்; பெரிய பானைகள். சிவன் எங்களிடம் "நீங்கள் முன்னால் செல்லுங்கள். நான் பின்னால் வருகிறேன்" என்றான். நாங்கள் மூன்றடி சென்றிருக்க மாட்டோம், சிவன் வந்து சேர்ந்தான். "காலையிலேயே சரக்குத் தீர்ந்து விட்டதாம்" என்றான். நாங்கள் ஒன்றும் சொல்லவில்லை. சிவன் எங்களிடம் "ஒவ்வொரு ஸ்டாப்பாக நிற்பதைவிட ஒரேயடியாக நாகர்கோவில் ஸ்டாப்பிற்கே போய்விடலாம்" என்றான். "சரி" என்றோம்.

முக்கால் தூரம் வந்துவிட்டோம். மேகமொன்று கலைய ஆரம்பித்ததும் பேச்சு சுவாரஸ்யத்தில் நான் பாதையைக் கவனிக்கவில்லை. சிவன் என் கையைப் பலமாகப் பிடித்து என்னை மாற்றினதும்தான் நான் என் முன் ஒரு நல்ல பாம்பு மெல்ல ஊர்ந்து செல்வதைக் கண்டேன். ஒரு கணம் மூவரும் ஒன்றும் பேசாமல் நின்றுவிட்டோம். எங்களைத் தாண்டி ஒரு பஸ் சென்றது. அதில் அவ்வளவாகக் கூட்டம் இல்லை என்பதும் எங்களைக் கவரவில்லை. சாரதி என்னிடம் "நவீனா, நீ சாகப் பிறக்கவில்லை" என்றான்.

நான் என்னவோ நினைத்த வண்ணம் "சாரதி, செத்துப் பிறந்தவனுக்குச் சாவேது வாழ்வேது" என்றேன்.

சிவன் "நானும் பார்க்கிறேன் ஒரு கடையிலாவது சரக்கில்லை" என்றான். நான் அவனிடம் "சிவா, பொறுத்திரு; நேற்றுத்தானே மதுவிலக்கு நீக்கப்பட்டது" என்றேன்.

நாங்கள் நாகர்கோவிலை நெருங்க நெருங்க, சென்ற பஸ்களில் கூட்டம் குறைந்துகொண்டே வந்ததைப் பார்த்தோம் கடைசியாக நாகர்கோவில்.

சிவன் "இங்கிருந்து திருவனந்தபுரம் நடந்து செல்ல முடியுமா?" என்றான்.

நான் அவனிடம் மீனாட்சிபுரம் பணிமனையில் நின்று கொண்டிருந்த நாகர்கோவில் திருவனந்தபுரம் பஸ்ஸைக் காட்டினேன். அதில் கூட்டமே இல்லை!

சாரதி எங்களிடமிருந்து விடைபெற்றுச் சென்றான். ●

கேள்வி : இலக்கியச் சிந்தனை கூட்டத்தில் சிதம்பர ரகுநாதன் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு இப்போது அவர்களே தமிழ் வருடப்பிறப்பன்று வெளியிட்டுள்ள 'கனவுக் கதை' என்ற சிறுகதைத் தொகுதியில் இடம் பெற்றுள்ள சுகி சுப்பிரமணியத்தின் கதை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

பதில் : 'இலக்கியச் சிந்தனை' அது அளிக்கும் சில வார மாதப் பத்திரிகைகளிலிருந்து எந்த ஆசிரியரின் எந்தக் கதையையும் தேர்ந்தெடுக்கும் முழுச் சுதந்திரத்தை ஒவ்வொரு மாதமும் ஒரு விமர்சகருக்கு அளிக்கிறது. அந்த ஒரு விமர்சகர் அந்த மாதம் வெளியான கதைகளில் சிறந்ததை-அல்லது சிறந்தது என்று அவர் கருதுவதைத் தேர்ந்தெடுத்து அறிவிக்கிறார். இதுதான் இலக்கியச் சிந்தனை நடை முறை.

சிதம்பர ரகுநாதன் அவர்கள் இக் கதையைத் தேர்ந்தெடுத்ததும் இப்படி நடைமுறையை ஒட்டியதாகவே இருக்கவேண்டும். மற்றவர்கள் தேர்ந்தெடுத்திருப்பதும் இதே போல்தான். ஒருவர் தேர்ந்தெடுத்தது எல்லோருக்குமே பிடிக்கவேண்டுமென்பதில்லை. ஆனால் சிலர் இதை ஒட்டிய விமர்சனங்களிலும், கட்டுரைகளிலும விஷயத்தைவிட்டு விட்டு ரகுநாதனை ஏதோ 'ஆசாரக் கம்யூனிஸ்டு' என்றும் 'வைதீகக் கம்யூனிஸ்ட்' என்றும் எழுதி வருவது பொறுப்பில்லாத சிறுபிள்ளைத் தனமாகவே இருக்கிறது. இப்படி ரகுநாதனைப் பற்றி எழுதுகிறவர்களைவிட ரகுநாதன் தமிழில் அதிகமாகச் சாதனைகள் புரிந்திருக்கிறார் எனபது மெய்.

(தீபம்—மே 1972—இலக்கிய மேடை)

வழக்கம்போல் கேள்விக்கும் பதிலுக்கும் எந்தவிதச் சம்பந்தமும் கிடையாது. பதிலின் படபடப்பைப் பார்க்கும்போது முதலில் கிருஷ்ணமூர்த்தியும், பிறகு நானும் சொன்னதற்கு அடைமொழி தந்துவிடும் அவசரம்தான் தெரிகிறது. இந்த அவசரம் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டதொன்ருகத் தோன்றுவதால் பார்த்தசாரதியே ஒருவேளை இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டார் போலும். அப்படியானல் பதிலுக்கேற்றவாறு கேள்வி கேட்டுக் கொள்ளும் சாமர்த்தியம் பார்த்தசாரதிக்குப் போதாது. வாசகர்தான் இந்தக் கேள்வியைக் கேட்டார் என்று வைத்துக் கொண்டால், அதற்கேற்ற பதில் சொல்லும் அடிப்படைச் சிந்தனைத் தெளிவு அவருக்கு வரவில்லை என்றுதான் நாம் கொள்ளவேண்டும். மாருக வாசகர் ஒருவேளை பார்த்தசாரதியை அந்தக் கேள்வி கேட்கவில்லையோ என்னவோ? அப்படியானல் தீபம் ஆபீஸ் கம்பாஸிட்டருக்குக் கேட்ட கேள்வியா அது?

பார்த்தசாரதிக்கு, வாசகர் ஒருவர் கேட்ட கேள்வி என்ற நம்பிக்கையில் பார்க்கலாம். சுகி சுப்பிரமணியத்தின் கதையைப் பற்றிப் பார்த்தசாரதி என்ன நினைக்கிருர் என்பதுதான் கேள்வி. இது குறைந்தபட்ச மொழியறிவு இருந்தால்கூடத் தெரியும். ஆனல், பார்த்தசாரதியின் பதிலில் எங்கேயும் அவர் என்ன நினைக்கிருர் என்று தெரியவில்லை. ஒரு கதையைப் படித்துவிட்டு அதன் தரத்தைப் புரிந்துகொள்ளும் சக்தி அவருக்கு இல்லையா? அல்லது புரிந்துகொண்டு, கருத்தைச் சொல்லும் தைரியம், தன்னம்பிக்கை இல்லையா? கிருஷ்ணமூர்த்தியும், நானும் ஏதோ பொறுப்பில்லாமல் ரகுநாதனை வைதீகக் கம்யூனிஸ்ட் என்று சொல்வதாக நினைக்கும் பார்த்தசாரதி தான் சுகிசுப்பிரமணியத்தின் கதையைப்பற்றி என்ன நினைக்கிருர் என்று சொல்லி அதை ரகுநாதனின் கருத்துடன் ஒப்பிட்டு எங்களுக்குப் பதில் சொல்ல முற்பட்டிருக்கவேண்டும். அதை விட்டு அடைமொழியை வீசுவது அவருடைய நிச்சயமின்மையையும், பொறுப்பின்மையையும்தான் காட்டுகிறது.

அப்படியே நாங்கள் ரகுநாதனை வைதீகக் கம்யூனிஸ்ட் என்று சொல்வதை நா. பா. எதிர்க்கிருர் என்ருலும் அவர் பதிலில் கடைசி வாக்கியத்திற்கு எப்படி நியாயம் சொல்லப் போகிருர்? கிருஷ்ணமூர்த்தியோ, நானே எங்கள் விமரிசனங்களில் நாங்கள் ரகுநாதனை விட அதிகம் சாதித்ததாக எங்கும் சொல்லவில்லை. ரகுநாதனின் இலக்கியச் சாதனை பற்றிய விவாதமே இல்லை. அர்த்தமின்றி, சம்பந்தமின்றி இந்தக் குரலில் நா. பா. பேசும் போது நீ மட்டும் என்ன பத்தினியா என்று கேட்கும் நிலைமைபாமரத்தனமாகத்தான் நாம் காண்கிருேம். பார்த்தசாரதியின் இலக்கிய அந்தஸ்தைப் பற்றிய தீவிரக் கேள்விகள் கேட்கப்படும் இந்த நேரத்தில், தனியாக நிற்க அஞ்சி, எக்காரணத்தைக் கொண்டாவது இன்னொருவரின் துணையை அழைத்துக் கொள்ளும் அ—இலக்கிய பயம்தான் அவர் பதிலில் தென்படுகிறது.

ரகுநாதன், தான் ஒரு கம்யூனிஸ்ட்என்று சொல்லிக் கொள்பவர். ஒரு கம்யூனிஸ்டுக்கு சோஷலிஸ யதார்த்தக் கண்ணேட்டம் இருக்கும் என்று நம்புகிருேம். ஆனல அவர் தேர்ந்தெடுத்த கதை அவர் குறைந்தபட்சக் கம்யூனிஸ்டாகக் கூட இல்லை என்று காட்டுகிறது என்பதைச் சொல்லத்தான் கிண்டலாக வைதீகக் கம்யூனிஸ்ட் என்ருேம். சோஷலிஸ

யதார்த்தப் பார்வையிலும் சரி, மற்ற இலக்கியப் பார்வையிலும் சரி, இந்தக் கதை மிக மோசமாக எழுதப்பட்ட கதை.

நேர்மையை டிரைவர் கண்ணாயிரத்தின் மூலம் நிலைநாட்டிவிட வேண்டுமென்பது இக்கதையின் குறிக்கோள். இதைச் சொல்ல சுகி சுப்பிரமணியம் நான்கு episode களை எடுத்துக்கொண்டிருக்கிறார். நான்கும் romantic episodes. சிறுவயதில் மாமனிடம் படிப்பிற்குப் பணம் கேட்டுச் செருப்படி படுவது; பத்து வருடங்களுக்குப் பிறகு மாமன் மகளைத் தேன்நிலவில் சந்திப்பது; கணவனுக்குத் தெரியாமல் அவள் பணத்தைக் கைப்பையில் தருவது; ரயிலடியில் அவன் பணத்தைத் திருப்பித் தருவது. இந்த நிகழ்ச்சிகள் பிற்போக்குத்தனம் நிறைந்த, வாழ்க்கையைக் காரணங்கற்பித்து ஏற்கும் மனிதர்கள் மூலமாக வெளிப்படுகின்றன. எல்லாவற்றையும் மீறிய போலித்தனம் எழுத்தில் தெரிகிறது. நிகழ்ச்சிகளை அசட்டுத்தனமாகப் பிணைத்து மேலோட்டமாகப் பழைய பாட்டி சொல்லும் வகையில் எழுதப்பட்டிருக்கிறது.

'நெஞ்சில் ஈரமும், வீரமும் கொண்டவன்' என்று ரகுநாதனால் வர்ணிக்கப்படும் கண்ணாயிரம் சொல்கிறான்; "அன்பு வளரும்; கல்யாண ஆபத்து வருமுன்னு நினைச்சுத்தான் என தாய் மாமன் என் படிப்புக்குப் பணம் உதவலே. செருப்பைத் தூதுவிட்டு விரட்டி அடிச்சார். நான் இந்த டாக்டர் ஆகமுடியுமா? முடியாது. அன்னிக்கு அவர் செருப்பாலே வீசினது சரிதான். எதுக்கும் அந்தஸ்து, சமத்துவம் வேணும்" இதற்கு இரண்டு வரிகளுக்குப் பிறகு சுகி எழுதுகிறார். "கார்க் கதவைத் திறந்துவிட்டான் கண்ணாயிரம். அவன் மனிதனல்ல. ஒரு ஞானியாக...'

பிறகு அவன் தன் அத்தை மகள் தரும் பணப்பையை வாங்கிக் கொள்கிறான். விருப்பமின்றி அல்ல. "அதை எடுத்துக் காலடியில் போட்டுக் கொண்டான்.'' "அவர் கண்ணில் பட்டுவிடும் என்று பயப்படுகிறீர்களா? படாது'' என்று வேறு உறுதி சொல்கிறான். பின் ஏன் ரயிலடியில் பணத்தைத் திருப்பித் தந்தான்? பத்தோ பதினைந்தோதான் பெறும் செருப்பை அத்தை மகள் டாக்ஸியில் மறந்து விட்டுச் சென்றதும் அதை எடுத்துச் சென்று கொடுக்கும் கண்ணாயிரம் ரயிலடியில் சொல்கிறான். "பத்தோ பதினைஞ்சோ இருந்தா நான் வைச்சுக் கொள்வேன். உள்ளே பார்த்தா ஐயாயிரம் இருந்தது.'' அவன் நேர்மை தொகையைப் பொறுத்தது போலும். அல்லது, அவன் "நேர்மை"யை நிலைநாட்ட இம்மாதிரியாக அபத்தமாக எழுதவேண்டியிருந்தது போலும்.

கதையில் வரும் டாக்டர் ராஜனின் சில வார்த்தைகள். [ஏழைகள் உயர உழைப்பு மட்டும்] "போதாது. செல்வம் கொஞ்சம் செல்வாக்கு கொஞ்சம். அப்பாலே சமூகப் பிரமுகர்கள் நட்பு...கார்...இதெல்லாம இருந்தாலதான் அந்தஸ்து உண்டாகும்.''

"முன்னுக்கு வரவேண்டுமானால் பணக்காரர்கள் தயவு, பதவிக்காரர்கள் தயவு வேண்டும்.''

இப்படிப் பேசுகிறவன் மனைவியைப் பாடச்சொல்கிறான். 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று பாடுகிறாள்.

"காந்தியத் தத்துவமே இதுதான்'' என்றான் டாக்டர் ராஜன்.

நமக்குத் திடுக்கிடுகிறது. காந்தீயம் இங்கே எப்படி வந்தது? அதுவும் ராஜன் வாயில். அவன் இப்படிச் சொல்ல முகாந்திரம் கதையில் எங்கும் இல்லை. இது ஆசிரியனின் போலித்தனம் அன்றி வேறென்ன? எதையும் எழுதிவிடலாம் என்ற விட்டேற்றித்தனம். என்ன எழுதுகிறோம் என்ற பிரக்ஞையின்மை. இந்த எழுத்தை ரகுநாதன் சிறந்தது என்கிறார். பார்த்தசாரதி வழிமொழிகிறாற்போல வக்காலத்து வாங்குகிறார்.

சுகி சுப்பிரமணியத்தின் நடையைப்பற்றி மாதிரிக்கு.

"மதனும் ரதியும்போலப் பளபளக்கும் உடையில் இருவரும்...''

"ராஜனின் ஆஜானுபாகுவான உடம்பையும், அவன் அருகாக அரம்பைபோல நடக்கும் அழகுக் கிளியையும்...''

"துள்ளி நடைபோடும் மானையும், துரித நடைபோடும் இளங்காளையையும்..."

சுயமாக எழுதத் தெரியாத அவலம். தனக்கும் இம்மாதிரியாகத்தான் எழுத வருகிறது என்பதனால் பார்த்தசாரதி ரகுநாதனுக்குத் துணை வருகிறாரா?

இந்தக் கதையைத் தேர்ந்தெடுத்ததில் ரகுநாதனின் பிற்போக்குத்தனம் அவரை அறியாமல் வெளிப்பட்டிருக்கிறது. இந்த பூர்ஷ்வா எழுத்தைச் சற்றும் முகஞ்சுளிக்காமல் அவரால் ஏற்றுக்கொள்ள முடிந்திருக்கிறது. இந்த எழுத்தில் எல்லாவற்றையும் மீறித் தெரியும் போலித்தனத்தைப் பாராட்ட முடிந்திருக்கிறது.

காவியக் கதாநாயகிகளை அன்னத்துடனும், ஊஞ்சலிலும், குளக்கரையிலும் நான்கு வண்ணங்களில் உலாவவிட்டு அட்டைப் படம் போட்டுக் கொண்டிருக்கட்டும் பார்த்தசாரதி. இலக்கியப் பிரச்னைகளில் தலையிடும்போதும் குறைந்தபட்சம் இன்னார்இன்னாரைப் பற்றிப் பேசுகிறோம் என்று அவர்கள் பெயரிட்டுப் பேசட்டும். சகோதரப் பத்திரிகை சிலர் என்ற அநாமதேயத்தில் மறைத்துவிட முயற்சிக்கவேண்டாம்.

— ராமகிருஷ்ணன்

# ரெகன்சிலியேஷன்

ஆர். கண்ணன்

அறையிலிருந்து கிளம்பும் போதே இவனுக்குச் சந்தேகம்தான். மஞ்சளும், சிவப்பும், ஊதாவுமாகக் கோடுகள் போட்ட அந்தப் பருத்திச் சட்டையைத் தீபாவளி சமயத்தில் டெய்லர் ஏமாற்றி விட்டதால், ஊருக்குப் போகிற அவசரத்தில் கடைக்கு ஓடி பன்னிரெண்டரை ரூபாய்க்கு வாங்கினான். கடைக்குள்ளே அது பாலித்தீன் பையினுள் உறங்கிய போது விளக்குகளின் ஒளியில் நன்றாகத்தான் இருந்தது. ஏதோ ஒரு எமோஷனில் வாங்கி விட்டானே தவிர ஒவ்வொரு தடவை அந்த சட்டையைப் போடும்போதும் இவனுக்கு மனதிற்குள் ஏதோ அவமான உணர்வு அரிக்கும். சட்டையைப் போட்டுக்கொண்டு கண்ணாடியின் எதிரே பத்து நிமிஷம் நிற்பான். அந்த சட்டையை அணிந்ததால் முகத்தில் அளவுக்கு அதிகமாக அசடு வழிகிற மாதிரி பிரமை தட்டும். ஆபீசுக்கு நேரமாகி விட்டது என்று உள்ளுணர்வு அச்சுறுத்தினாலும் அறையை விட்டு வெளிப்பட மனமில்லாமல், கண்ணாடியைப் பார்த்துக்கொண்டே நிற்பான். பிறகு சட்டென்று தேறி, அறையைப் பூட்டி, சாவியை உட்புறம் ஜன்னல் கட்டையில் வைத்து, கதவைச் சாத்திவிட்டுப் போவான்.

அந்த சட்டையைக் கையில் எடுத்த போதே இவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. ஆபீசில் இன்றைக்கு சூப்பிரண்டு நம்மை எங்காவது அனுப்புவானோ என்று நினைத்த மாதிரியே இவன் அட்டெண்டன்ஸில் கையெழுத்திட்டு விட்டு சீட்டில் அமர்ந்து, கைக்குட்டையால் முகத்து வியர்வையைத் துடைத்துக்கொண்டபோது, கண்காணிப்பாளன், "ஏன் சார், ரெகன்சிலியேஷன் பார்த்துவிட்டு வந்து விடுகிறீர்களா?" என்றான்.

இந்த ரெகன்சிலியேஷன் வேலை இவன் சீட்டு வேலை இல்லை. இவன் செக்ஷன் சூப்பிரண்டுக்கு இவனையும் சேர்த்து நாலு உதவியாளர்கள். அதில் ஒருத்தி பெண். அவளுக்கு எட்டு மாதம் ஒருத்தன் காஷியன். இந்தக் காஷியனுக்கு. பே பில், டீயே பில், கன்டின்ஜென்ட் பில், மற்றும் பில் சம்பந்தப்பட்ட இழவெல்லாம் தெரியும். தெரியாதது ஒழுங்காய் இரண்டு வரி இங்கிலீஷில் எழுதுவது. ரெகன்சிலியேஷன் வேலைக்கு நியாயமாக இவனைத்தான் அனுப்பவேண்டும். இவனுக்கு இன்னொரு ஆபீசில் போய் எவனையாவது அணுகி விபரம் விஜாரிப்பதற்கு எல்லாம் சாமர்த்தியம் போதாது என்பது சூப்பிரண்டின் கணிப்பு. இன்னொருத்தன் இளநிலை உதவியாளன். இந்த இ.நி.உ.வைத் தவிர மேலே குறிப்பிட்ட மூன்றுபேரும் மேல் நிலை குமாஸ்தாக்கள். நாலாவது ஆசாமியை வேறங்கோ டைவர்ட் பண்ணிவிட்டு அந்த இடத்தில் இ நி உ.வைப் போட்டிருந்தது. ஒரு மேல் நிலை உதவியாளன் சீட்டில் அமர்ந்து உத்யோகம் பண்ணுவதால், தான் வாங்கும் சம்பளத்திற்கு மேலேயே அதிகம் உழைப்பதாக இளநிலை உதவியாளனின் நினைப்பு. இவனை அதிகம் வேலை ஏவினால் முறைப்பான்: அல்லது ஏறுக்கு மாறாக ஏதாவது செய்து வைப்பான். இலாகா முழுவதற்குமான செலவின அறிக்கைகளைத் தயாரிப்பவன் இவன்தான். காஷியனை அனுப்ப முடியாவிட்டால் இவனையாவது ரெகன்சிலியேஷனுக்கு அனுப்பலாம். என்னவோ அந்தப் பெண்ணையும்; காஷியனையும், இளநிலை உதவியாளனையும் விட்டு விட்டு இவனை வெளியில் விரட்டுவதில் சூப்பிரண்டுக்கு ஒரு சந்தோஷம்.

சரி என்று சீட்டை விட்டு எழுந்து எதிரில் அமர்ந்திருந்த இளநிலை உதவியாளனிடமிருந்து எக்ஸ்பெண்டிச்சர் ஸ்டேட்மெண்டை வாங்கிக் கொண்டான். அடுத்த செக்ஷனுக்குப் போனான். ரெக்ரியேஷன் கிளப் காரியதரிசியின் மேசையில் அந்த மாத—இவன் பெரிதும் மதிக்கும் இலக்கியத்தரம் மிகுந்த பத்திரிகை கிடந்தது. அதையும் எடுத்து சுருட்டிக் கையில் வைத்துக் கொண்டான். திரும்பவும் காஷியனிடம் வந்தான்.

ஒருரூபாய்க்குச் சில்லறைமாற்றிக் கொண்டான். பஸ் கண்டக்டராவது சமயத்தில் கோபிக்காமல் சில்லறை கொடுப்பான். போஸ்டாபீசிலும், ரயில்வே ஸ்டேஷனிலும் சில்லறை இருந்தாலும் பொது மக்களுக்கு இல்லை தான்.

ஆபீசை விட்டு வெளிப்பட்டு மாடிப்படி இறங்கினான். மரத்தடியில் நின்று பேசிக்

ஒன்றும் அவசரமில்லை என்று இவனுக்குத் தோன்றியது. ரயிலைப் போகவிட்டு வேடிக்கை பார்த்து நின்றான். இரண்டு பக்கத்து வண்டிகளும் போனதும் ஸ்டேஷன் ஒழித்துவிட்டதுபோல் ஆயிற்று. அவ்வளவாகக் கூட்டமில்லை. நல்ல நிழல். வெயிலுக்கு இதமான காற்று. அந்தச் சூழ்நிலை மனதுக்கு ரம்மியமாக இருந்தது.

அப்படியே ஒரு சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்து கால்மீது கால் போட்டு அமர்ந்து கையில் கொண்டு வந்திருந்த பத்திரிகையைப் படிக்க ஆரம்பித்தான். ஒரு அட்டையில் இருந்து மறு அட்டை வரை திருப்தியாக அவன் அந்தப் பத்திரிகையைப் படித்து முடித்து நிமிர்ந்தபோது மேலும் இரண்டு ரயில்களைத் தவற விட்டிருந்தான்.

சிக்னலில் விளக்குகளின் நிறங்கள் மாறுவதைப் பார்த்தான். தூரத்து ஆசனங்களில் இருந்தவர்கள் எழுந்திருப்பதைக் கண்டு ரயிலின் வருகையை அனுமானித்துப் பிளாட்பாரத்து ஓட்டுக்குப் போய் நின்றான். பரீட்சை எழுதும்போது நேரம் பறப்பதைப்போல் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ரயில் அருகில் வந்து நின்றுவிட்டது.

இவனுக்கு எதிரே நின்ற பெட்டியிலிருந்து இரண்டு ஹாட் பாண்டுக்காரிகள் இறங்கினர். ஒருத்தி பெரிய வட்டக் குளிர்க் கண்ணாடியும், மற்றவள் பெரிய சதுரக் கூலிங் கிளாசும் அணிந்திருந்தனர். வாளிப்பான தொடைகளைப் பார்த்ததும் ரயில் ஏறவே மனமில்லை. பின்னாலேயே போகவேண்டும் என்று முரண்டு பிடித்த மனக் குழந்தையின் காதைத் திருகி, வண்டியில் ஏறவும் சட்டென்று ரயில் நகர்ந்து, வழுக்கிக்கொண்டு ஓடியது.

ஆசனங்கள் பல காலியாகக் கிடந்தாலும் இவன் கதவருகில் நின்றபடி பயணம் செய்வதையே விரும்பினான். சாப்பாட்டுக் கூடைக்காரிகள் கால் நீட்டி அமர்ந்து காய்ந்த வெற்றிலையில் சுண்ணாம்பு தடவிக்கொண்டிருந்தனர். கால்கள் சூம்பிப்போன ஒருவன் கைகளை ஊன்றி இவன் காலடியில் வந்து அமர்ந்து கை ஏந்தினான். கால்களைத் தவிர மற்ற அங்கங்கள் 'இவனுக்கு ஒழுங்காகத்தான் இருக்கின்றன. உட்கார்ந்த இடத்தில் கௌரவமாக உழைத்துப் பிழைக்கலாம்' என்று இவன் நினைத்து அவனைப் பார்க்கப் பிடிக்காமல் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

இரண்டு பக்கங்களிலும் சிமெண்டு தளமிடப்பட்ட கூவம் பதினொன்றரை மணி வெயிற் பொழுதில் பார்வைக்கு அழகாக இருந்தது. ரயிலுக்குக் கீழே கார்கள் வேகமாக ஓடியதை ரசிக்க முடிந்தது. ஆபீசில் அடைப்பட்டுக் கிடக்காமல் இப்படி ஒரு சிறு உல்லாசப் பயணத்திற்கு வழி வகுத்த ஜூபரின் டெண்டெண்டுக்கு நன்றி சொல்லவேண்டும் என்று இவன் நினைத்தபோது ஸ்டேஷனில் வண்டி நிற்கவும் ஒரு கூடைக்காரி, "யப்பா," என்று இவனிடம் கூடையை சுட்டிக் காட்டியபடி எழுந்து நின்றாள். இவனும் கூடையை அவள் தலையில் தூக்கி விட்டு விட்டு இறங்கி நடந்தான்.

புத்தகக் கடையருகே கொஞ்சம் தயங்கினான். ஏதாவது வாங்கலாமா என்று மனது குறு குறுத்தது. வேண்டாம் என்று கூட்டம் போன திசைக்கு எதிர்ப்பக்கம் போய் துருப்பிடித்துக் கிடந்த மாடிப்படிகளில் இறங்கி மரங்கள் அடர்ந்து பிச்சைக்காரர்களின் கொடைக்கானலாய் விளங்கிய தோட்டத்தில் கால் வைத்தான். உடனே பையிலிருந்த ரயில் டிக்கட்டைக் குட்டையாய்த் தேங்கிக் கிடந்த நீரில் சுண்டினான்.

இவன் கேட்டை அணுகியது, அந்த நாளைய கோட்டை மதிலை அகழி சூழ்ந்திருக்குமாமே அப்படி வெளிச் சுவரை முட்டி நிற்கும் சாக்கடை நீரை சில பேர் வேடிக்கை பார்த்து நின்றனர். இவனும் அவர்கள் பக்கத்தில் நின்று கவனிக்கவும், "பாம்புங்க, தேதே பெரிசு. அதோ அதோ தலையைத் தூக்குது!" என்றான் ஒருவன்.

பாம்பை வேடிக்கை பார்த்தது போதும் என்று இவன் மேலே நடந்தான். பிரும்மாண்டமான மரக் கதவுகளைக் கடந்து நுழைவாசலில் காலை வைத்ததுமே ஒரு ராணுவ ஜீப் சர்ரென்று முனை திரும்பியது. மிகவும் குறுகலான அந்தக் குகை போன்ற பிரதேசத்தில் ஒரு ஜீப்பின் திடும் பிரவேசம் இவனை அதிர்ச்சியுற வைத்தது. சுவரோரத்தில் ஒண்டினான். அடுத்தடுத்து நான்கு மிலிடரி ஜீப்பும் இரண்டு வாகன்களும் வேகமாய்த் திரும்பி வேகமாய் இவனைக் கடந்து சென்றுவிட, 'அப்பாடா,' என்று இவன் நிம்மதியாக நடுரோடில் நடந்தான்.

இரும்பு முள் வேலிகளில் ராணுவத்தினரின் காக்கியுமில்லாத பச்சையுமில்லாத பாசிக்கலர்ப் பாண்டுகள் உலர்த்தப்பட்டிருந்தன. அவர்களுடைய குழந்தைகள் ஹிந்தியில் ஏதோ பேசியபடி விளையாட்டில் ஈடுபட்டிருந்தன. வேலியருகே நிழலில் ஒதுங்கி இவன் முகத்தைக் கைக் குட்டையால் அழுத்தித் துடைத்துக் கொண்டபோது ஒரு கிழவர் இவனிடம் ஒரு மந்திரியின் பெயரைச் சொல்லி அவருடைய ஆபீஸ் எங்கே என்று கேட்டார். இவன் செகரடேரியட் பக்கம் கையைக் காட்டிவிட்டு நடந்தான்.



# கசடதபற


(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ் : 30 காசு

ஆண்டுச் சந்தா : ரூ 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7ந் தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்க வேண்டும்.

ஆசிரியர்: 'கசடதபற'

1 தேவடி தெரு

சென்னை 4


---

தேதி அஞ்சா? பென்ஷன் வாங்கும் கூட்டம் க்யூ நின்றது. இன்னும் ஒரு கால் நூற்றாண்டுக்குப் பிறகு தானும் இந்தக் 'க்யூ'வில் ஒரு அங்கம் என்று நினைத்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்தது. கையால் ஃபெடல் பண்ணும் மூன்று சக்கர சைகிள் ஒன்றும் ஒரு பக்கம் ஒதுங்கி நின்றது. 'காலில்லாத அந்தக் கிழவரை முதலில் அனுப்புப்பா', என்று சொல்லவேண்டும் போலிருந்தது இவனுக்கு.

மரப்படிகளில் ஏறி மேலே வந்தான். ஒரு பக்கத்திலிருந்து யாரோ இவன் பெயரைச் சொல்லி அழைக்கவும் அங்கே போனான். பல ஆபீஸ் பியூன்கள் 'செக்' வாங்கிப் போவதற்காக அங்கே குழுமி இருந்தனர். சிலர் முகத்தில் எரிச்சலைத் தேக்கி அமர்ந்திருந்தனர். சிலர் அடங்கிய குரலில் அரட்டை அடித்தனர். [பக்கத்து அறைகளில் ஆபீசர்கள் இருக்கிறார்கள். சத்தம் போடாதீர்கள்—என்றொரு அறிவிப்புப் பலகை.] சிலர் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தனர்.

இவனை அழைத்தவன் இவன் ஆபீஸ் பியூன். "ரொம்ப போரடிக்குது சார். பேஜாரு சாயங்காலம் வரைக்கும் நா இங்கக் காத்துக் கெடக்கணும். கைல இருக்கற புஸ்தகத்தைக் குடுத்துட்டுப் போ," என்றான்.

புத்தகத்தைக் கொடுத்துவிட்டு இவன் திரும்பி நடந்தான். குறுகலான பாதையில் பல குமாஸ்தாக்களின் மேசை நாற்காலிகளைக் கடந்து, பல இடங்களில் வளைந்து திரும்பி வரவேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்தான்.

ஒருவனுக்குக் குட்மார்னிங் சொல்லி "ஏப்ரல்மாத வவுச்சர்ஸ் எங்கே சார் இருக்கு?" என்று கேட்டான. அவன் ஒரு மூலையைச் சுட்டிக் காட்டினான். கட்டுக் கட்டாய் குவிந்திருந்தது. "அதுதான் ஏப்ரல் கலைக்காமல் பாருங்கள்."

அந்தக் குப்பைகளை நெருங்கினான். கையில் இருந்த செலவின அறிக்கையைப் பிரித்துப் பார்த்தான். ஏப்ரல் மாதத்தில் இவன் ஆபீஸ் கணக்கில் இரண்டாயிர ரூபாய் அதிகமாக ஏஜி செலவு எழுதிவிட்டார். எந்த ஆபீசில், யார் வாங்கிய தொகையோ? இவன் ஆபீஸ் கணக்கும், ஏஜியின் கணக்கும் 'டாலி'யாக வேண்டும். அந்த வவுச்சா நம்பரை வைத்து வவுச்சரைக் கண்டுபிடிக்க வேண்டும். பிறகு, நாங்கள் இல்லையப்பா, ஸோ அண்டு ஸோ வாங்கி இருக்கிறான் என்று ஏஜிக்குச் சொல்லவேண்டும்.

இடுமுடுக்கான இடத்தில் வவுச்சர் கட்டுகள் ஒன்றின் மீது ஒன்றாக ஒழுங்கில்லாமல் விட்டெறிந்து கிடந்தன. ரெண்டு பேர்களுடைய மேசைகளுக்குப் பக்கத்தில் இரும்பு மடக்கு நாற்காலிகளையும் போட்டு வைத்தவர்களை மனதில் சபித்தபடி இவன் முதலில் அந்த இடத்தில் நுழைந்து கொண்டான். குவியலிருந்து ஒரு கட்டை எடுத்துத் தனியே வைத்துக் கொண்டான்.

அழகான கட்டு கனமான சணலால் குறுக்கிலும் நெடுக்கிலும் இரட்டையில் வரிந்து பக்கவாட்டில் ரிப்பன் முடிச்சுப் போட்டிருந்தது. குனிந்து அவிழ்த்தான். குந்தினபடி

அமர்ந்து பார்ப்போம் என்று நினைத்தான். இறுக்கமான பாண்ட் அனுமதிக்காததால் குனிந்து குனிந்து ஒவ்வொரு கட்டாக எடுப்பதும், டேபினில் வைத்து இண்டெக்ஸைப் பார்ப்பதுமாக இருந்தான். சணலால் சேர்த்துக் கட்டப்பட்ட ஒவ்வொரு பெருங் கட்டிலும் இருபது கட்டுகள். ஒவ்வொன்றிலும் இருபத்தைந்து வவுச்சர்கள் அடக்கம்.

ஒரு பெரிய கட்டை அவன் பார்த்து முடித்தபோது மிகவும் வியர்த்துப் போயிருந்தான். இனி அந்தச் சிறு கட்டுகளைப் பழைய படி பெருங் கட்டாகக் கட்டிவைக்கவேண்டும்.

இவனுக்கு, ஊருக்குப் பயணப்படும் படுக்கையைக் கூட யாராவது கட்டித்தர வேண்டும். சின்ன வயது முதலே புத்தகங்களுக்கு அட்டை போடுவது, நாலு பேப்பரை வைத்து நோட்டாகத் தைப்பது. வெள்ளைப் பேப்பரில் நேர் நேராக ரூலரால் கோடு போடுவது ஆகிய கலைகள் இவனுக்குக் கை வராதவை. அப்போது பலராமன் என்கிற ராயர் பையன்—நல்ல உயரம், பல் எடுப்பு, காக்கி அரை நிக்கர், முரட்டுப் பச்சை நீள தலையால் மாட்டும் சட்டை—வந்து இந்த வேலைகளைச் செய்து கொடுப்பான். பரீட்சை சமயத்தில் பொறுப்போடு வந்து பேப்பருக்கு ரூல் போட்டுக் கொடுப்பான். மீந்தது எதைக் கொடுத்தாலும் வேண்டாம் என்று பிகு பண்ணாமல் சாப்பிடுவான். கூச்சமே இல்லாமல், தின்பதற்கு ஒன்றுமில்லையா என்று கேட்பான். பண்டிகை நாட்களில் தவறாமல் வந்து விடுவான். "என்னடா பலராமா, நேற்றைக்கு உன்னைக் காணோம். நீ இல்லாமல் ஒரு பண்டிகையும் போகாதே!" என்று கேலி செய்தால், "பாருங்க மாமி!" என்று அழும் குரலில் முறையிடுவான். "டேய், ஏண்டா அவன் வம்புக்குப் போறே? பலராமன் பாவம், அப்பாவி," என்று யாராவது பரிவார்கள். உயரமும், பருமனுமாக இருந்த அந்த பலராமன்—உள்ளத்தால் குழந்தையாக இருந்தவன்—பதினாறு வது வயதில் செத்துப் போனது வவுச்சர் கட்டுகளைக் கோணல் மாணலாகக் கட்டி வைத்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில் இவனுக்கு நினைவிற்கு வந்தது.

ஒரு வழியாக இவன் எல்லா கட்டுகளையும் புரட்டி நிமிர்ந்தபோது பிற்பகல் மணி $3\frac{1}{2}$ நடுவில் $3\frac{1}{4}$ மணி நேரம் டிபனுக்கு எடுத்துக் கொண்டான். மொத்தத்தில் வியர்த்துக் களைத்ததுதான் மிச்சம். அந்த மாய வவுச்சர்களைக் கண்டே பிடிக்க முடியவில்லை. குனிந்து நிமிர்ந்து தண்டால் எடுத்ததில் உடம்பெல்லாம் வலித்தது.

வவுச்சர் கட்டுகளைக் கிளற இவனை அனுமதித்த அந்தக் குமாஸ்தாவுக்குத் தாங்ஸ் சொல்லிவிட்டு வெளியில் வந்தான். அப்பா, என்ன குளுமையான காற்று. வெயில் கொஞ்சமாகவும், நிழல் அதிகமாகவும் இருந்த மூன்றரை மணி வெதர் இதமாக இருந்தது.

கோட்டையின் நுழைவாசலில் ஒரு காண்டீனைப் பார்த்ததும் தொண்டையில் நமைச்சல் எடுத்தது. கூட்டமே இல்லாத அந்தக் கடையில் நுழைந்து அமர்ந்ததுமே சர்வர் மூஞ்சியால் என்ன வேணும் என்று கேட்டபடி அருகில் வந்தான். காஃபி சொல்லிவிட்டு இவன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்தான். பயங்கரமாய் எண்ணெய் வழிந்தது.

வாஷ் பேசினுக்குப் போனான். முகம் அலம்பிக்கொண்டு திரும்பியபோது இவனுக்காகக் காபி காத்திருந்தது. அதில் விழுந்து சீ-ஒரு ஈ உயிரை மாய்த்துக் கொண்டிருந்தது. இவன் முகம்போன போக்கை உணர்ந்து சர்வர் அருகில் வந்தான். "அடாடா, வேற கொண்டு வரேன் சார்..." என்றான். "வேண்டாம்பா," என்று பில்லைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தான்.

அடுத்த அரை மணியில் பாரீஸ் கார்னரில் இவன் டபுள் டெக்கர் பஸ்ஸில் அமர்ந்திருந்தான். இவனும் சென்னைக்கு வந்து ஒரு வருஷம் பதினைந்து நாள் ஆயிற்று. இந்த இரண்டு அடுக்குப் பஸ்ஸில் ஏறினதே இல்லை. இப்போது ஏஜிஸ் ஆபீஸ் போகவேண்டும் என்று தேடிவந்தபோது ஒரு அழகி பெரிய கொண்டை போட்டுக்கொண்ட மாதிரி இது கம்பீரமாக நிற்கவும் ஆர்வத்தோடு ஏறி, உள்ளே வந்து அமர்ந்து கொண்டான்.

---

## அந்த மானுக்கு ஆப்பரேஷன்

அந்த
மானுக்கு ஆப்பரேஷன்

ஓநாய்க் கஞ்சும்
விழிகளைப் பிதுக்கி
ஓநாய் விழிகள்

துள்ளல் கால்களைத்
துண்டித்து விட்டு
எருமைக் கால்கள்

வெப்பரத்தம்
ஊற்றி விட்டுச்
செத்த ரத்தம்

புல்லை ஒதுக்கிப்
புசிப்பாய் புலால் என்று

இதயம் வெட்டி
எங்கோ புதைத்து விட்டு
உரத்த குரலில் ப்ரிஸ்க்ரிப்ஷன்
"மானின் தோலை மாற்றி விடாதே"

—தேவதச்சன்

சற்று நேரத்தில் ஒரு மாடிக் கட்டிடம் நகர்வதுபோல் பஸ் நகரவும் இவனுக்கு உற்சாகமாக இருந்தது. அந்த உற்சாகமும் சற்று நேரமே நீடித்தது. சாதாரண பஸ்ஸுக்கும் இதற்கும் ஒன்றும் வித்தியாசமில்லை என்று தோன்றியது.

ஆபட்ஸ்பரி அருகில் இறங்கினன். உள்ளே ஏதாவது நிகழ்ச்சி இருக்கும் பட்சத்தில் மரங்கள் எல்லாம் கலர் விளக்காய்ப் பிரகாசிக்கும் ஆபட்ஸ்பரி அழுது வடிந்தது. ஏஜி ஆபீசின் ஒரு சூப்பிரண்டு இவன் தங்கைக்கு ஜாதகம் தருவதற்கு அன்றைக்கு வரச் சொல்லியிருந்தார். அப்போது அவரே எதிரே வந்தார். "அடாடா, மறந்தே போய்விட்டேன் சார், சாரி நாளைக்கு வாங்களேன்" என்று சொல்லிவிட்டு எதிர்பக்கம் பஸ்ஸுக்கு நிற்கப் போய்விட்டார். "பெரிய கவர்னர், மயிராண்டி. மறந்து விட்டானும்!' என்று மனதினுள் திட்டிக்கொண்டு நின்றான். திரும்பவும் பஸ் பயணம் செய்வதா என்று சற்று யோசனை வேண்டாம் என்று பொடி நடையாக நடக்க ஆரம்பித்தான்.

நடந்தே திருவல்லிக்கேணியை அடைந்த போது மணி ஏழே முக்கால் ஆகியிருந்தது. நடுவில் இரண்டு பாவிகள் மடக்கிக்கொண்டு அரை மணி நேரம் அறுத்ததில் நேரமாகி விட்டது.

ரூமுக்கு வந்து கைலி கட்டிக்கொண்டு வெங்கோஜி மெஸ்ஸுக்கு சாப்பிடப்போனன். கல்லாவில் தொடங்கி, மெஸ் வாசலில் வழிந்து, சந்து முனை வரை நின்றது க்யூ. கடைசி ஆளாக நின்று விரல் நகத்தைக் கடித்துக் கொண்டிருந்தான்.

சந்துக்குள்ளே நடந்து போனவர்கள் எல்லாம் இந்த விசித்திர க்யூவைப் பார்த்துக் கொண்டு சென்றனர். ஒருத்தன் மட்டும், "சோத்துக்கு நிக்கறீங்களாக்கும்?" என்று கேட்டுவிட்டுப் போய்க்கொண்டேயிருந்தான். "கிழவனுக்கு ஜோக் வேண்டியிருக்கு!' என்று ஒருவன் கடுப்படித்தான்.

க்யூ மெல்ல நகர்ந்தது. நல்ல வெங்கோஜி மெஸ்ஸ்என்று நினைத்துக் கொண்டான்இவன் போட்ட இலையை மாற்றக்கூடாது. தண்ணீரைத் தரையில் கொட்டக்கூடாது. டம்ளரை தூக்கிச் சாப்பிடவேண்டும். சாதத்தையோ, கறியையோ எறியக்கூடாது. தொடர்ந்து இரண்டு நாட்களுக்குமேல் நோட்டை நீட்டக் கூடாது; மூன்றுவது தடவையில், சில்லறையாகக் கொண்டுவர வேண்டும் என்று எச்சரிக்கப்படுவார்கள்; எத்தனை வருஷமாகச் சாப்பிட்டாலும் என்றைக்காவது எவனுவது டிக்கட்டை மறந்துவந்து விட்டேன் என்றால் அதுக்கென்ன, சாப்பிட்டுவிட்டுப் போங்க என்கிற உரிமைப் பேச்செல்லாம் கிடையாது.

இவனுக்கு வயிற்றைச் சுருட்டி இழுத்தது பசி. அப்போதுதான் மெதுவாய் மெஸ்வாசல் கதவை நெருங்கி இருந்தான். இவனுக்குப் பின்னுல், இவன் வந்து நின்ற இடம் வரை திரும்பவும் க்யூ வளர்ந்திருந்தது. பசியால் துடித்துக்கொண்டு இப்படி வெங்கோஜி வாசலில் இவன் காத்து நிற்பதை அம்மா பார்த்தால் ரத்தக்கண்ணீர் வடிப்பாள். இப்படிச் சீரழிவதற்காகவா சென்னைக்கு மாற்றிக் கொண்டு போனாய்? என்ன பிள்ளையோடா...

அம்மாவை நினைத்ததும் இவனுக்குத் தங்கையின் நினைவும் வந்தது. அவளுக்குக் கல்யாணம் பண்ணவேண்டும். அலைந்து திரிந்து ஜாதகம் தேடி, வரன் தேடுவது இவனுடைய ஒழிந்தபொழுது வேலை. எத்தனை இடங்கள், எத்தனை மனிதர்கள். பெருந்தன்மையான ஆசாமிகளையே பார்க்க முடிவதில்லை. இந்த மாப்பிள்ளைப் பையன்களை உதைத்தால்கூடப் பரவாயில்லை. இவன்களாவது பெரியவர்களுக்கு எடுத்துச்சொல்லக் கூடாதா? இவன்களை எவன் திருத்தப் போகிறான்? அடுத்தவன் வீட்டுப் பணத்திற்கு ஏண்டா இப்படிப் பறக்கிறீர்கள்?

ஆனல் கல்யாணம் செட்டில் பண்ணுவதற்கு எல்லாம் கொஞ்சம் வயது முதிர்ந்தவர்களாக இருக்கவேண்டும். அவர்கள்தான் அதே காரியமாக இருப்பார்கள். நமக்குத்தான் மேட்ரிமானியலில் இரண்டு காலம் பார்த்து மூன்றுவதைப் பார்க்க ஆரம்பிக்கும் போதே போரடிக்கிறதே, ஒரு 'பையன்' பர்சனலிடியோடு எங்காவது போய் ஜாதகம் கொடுக்க முயன்றாலே யாரும் மதிப்பதில்லை.

...இவன் நினைத்துப் பார்த்தான். இன்னும் இருபது வருடங்களில் நமக்கு ஒரு பெண் கல்யாணத்திற்கு இருக்கக் கூடும். உடம்பு இப்படி ஒல்லியாக இருக்காது [இவனுக்கு] இரட்டை நாடியாக, நரைத்த தலையாக [ஒரு வேளை வழுக்கையோ?] மூக்குக் கண்ணுடி போட்டுக்கொண்டு தோளில் துண்டும், அரைக்கை சட்டையுமாக...வாங்க, வாங்க இப்படி உட்காருங்க. எங்கே உத்யோகம் பாக்கறீங்க. உங்க பெண் ஜாதகமா? குடுங்க ஏய், யார்ரா அங்க? நம்ம இவன் ஜாதகக் காப்பியைக் கொண்டு வந்து குடு. அதுக்கு முன்னலே ஜோரா காப்பிபோட்டு... [அல்லது நம்முடைய பையன்கள் நம்மைவிட புத்திசாலிகளாக இருக்கக்கூடும். நீ ஏம்பா கஷ்டப்பட்றே? பேசாம உட்காரு நாங்க பார்த்துக்கறோம். சபை நிறைஞ்ச மனுஷா வந்து கௌரவப்படுத்து போதும்...]

யாரோ இவன் தோளைத் தொட்டார்கள். கல்லா அருகில் நின்ற ஒருவன் கத்தினன். "ஒரு எடம் இருக்காம். யாராவது போறதுன்னு போங்க..." அப்பாடா. அப்போதே இவனுக்கு வயிறு குளிர்ந்தது. வாட்ச்ஸ்ராப்பில் செருகிய டிக்கட்டை உருவி எடுத்துக் கொண்டு முன்னேறினன். ●

# கலாச்சாரம் என்றால் என்ன?

அரூப் சீவராம்

எவ்வித மறுமலர்ச்சியும் சமூகக் கட்டுக்குள்ளிருந்து பிறப்பதில்லை. சமூகத்தின் க்ஷீணதசையை உணர்ந்து அதிலிருந்து, அதன் பிரதிபிம்பமான தன்னிலுமிருந்து விடுதலை அடையும் தனிமனிதர்கள் மூலமே உண்டாகிறது.

சமூகம், மனிதன் என்ற இரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று பிறந்து, ஒன்றைச் சார்ந்து ஒன்று நிற்கிறது என்ற உண்மையை இது மறுப்பதாகாது. ஆனால் சமூகம் பூரணமனிதனிடமிருந்து சுவீகரித்த மதிப்புகளை வற்புறுத்தலாககுகிறது — எனவே அம் மதிப்புகளை வெளிப்படையாக மட்டுமே திருப்திப்படுத்தி உள்ளூர அமுக்கிக்கொண்டுபோகும் நிலைமைக்கு ஆளாகிறது. அதோடு இனி வரும்தனிமனிதனை, அவனது உன்னத இயல்புகளை இதே தன் அபத்தத்தைக் கொண்டு நசுக்குகிறது. மிருகத் தேவைகளின் அதிகரிப்பினால் உந்தப்பட்டு சமூக விரோதிகளாகிறவர்களுக்கும் இந்த உன்னத ஜீவர்களுக்குமிடையே வித்யாசத்தை நாம் உணர்கிறோம். இந்த உன்னத மனிதர்கள் வேண்டும் விடுதலையின்சாயலை தமக்குச் சாதகமாக்கக்கூடிய வசதி சில வேளைகளில் இந்த மிருகத்தன்மை உள்ள மனிதர்களுக்கும் வந்துவிடுகிறது. தன் செய்கையின் அடிப்படைப் பொறுப்பான பாவ புண்ணிய அளவு கோலையே சமூகத்தின் அளவு கோலெனக் கண்டு அதைத் துறப்பவனே உண்மையான தனிமனிதன். அவனுக்குச் சமூகம் தன்னைப்போற்றுவதும் தண்டிப்பதும் அவனது உள்ளத்தைப் பொறுத்தவரை ஒரு பொருட்டல்ல. இந்த மனப்பாங்கிற்கு எதிரிடையான, உண்மையில் சமூகத்தின் அவலச் சாயலேயானவன்தான் மிருகத்தன்மையுள்ள மனிதன். இந்த மிருக இயல்பு தனிமனிதனிடமும் இருந்து அதைஅவன் மீறவியலாமல் அதற்கே இரையாகித் தனது தனிமனித இயல்பின் மூலம் சம்பாதித்த அசாதாரண வேகத்தின் வழியே தனது மிருகவியல்புகளை கலாச்சார உலகினுள் நிலை நிறுத்தக் கூடிய சாத்தியம் இருக்கிறது.

பிரெடெரிக் நீஷின் ஜாரதுஷ்டிரன், லோக குரு என்று அன்னி பெஸன்டினால் பிரகடனப் படுத்தப்பட்ட ஜித்து கிருஷ்ணமூர்த்தி இருவருமே சீடர்களைத் துறந்தவர்கள் என்பதை நாம் காண்கிறோம். "எப்போது நான் சொன்னவற்றை மறுப்பதற்கு நீங்கள் கற்றுக் கொள்கிறீர்களோ அப்போதுதான் உங்களிடையே நான் திரும்பவும் வருவேன்" என்றான் ஜாரதுஷ்டிரன். "எவ்விதமான அதிகாரத்தையும் சரி, அரசியல் தளத்தில் மட்டுமல்ல, ஆன்மிகக் கருத்துலகின் தளத்திலும் கூட உள்ள அதிகாரத்தையும் துறக்கிறபோது தான் விழிப்பு ஏற்படுகிறது" என்பதுதான் கிருஷ்ணமூர்த்தியின் அடிப்படைச் செய்தி. இந்த விழிப்பே ஜாரதுஷ்டிரன் குறிப்பிட்ட அவனது 'திரும்ப வருதல்' — கிறிஸ்துவின் மறு வருகை கூட! ஆனால் இவற்றின் உள்ளர்த்தம் பெரும்பான்மையானவர்களின் சௌகரியங்களுக்கு ஆபத்தானது எனக் கண்டு, இவற்றின் மையமான நீஷ், கிருஷ்ணமூர்த்தி, கிறிஸ்து போன்றோரைக் குறியீட்டு அல்லது குணரூப (abstract) தளத்தில், மத, தத்துவ ரீதியில் மட்டுமே சமூகம் வைத்துக் கொள்கிறது. இந்தச் சமூக இயற்கையை நுண்ணுணர்வுள்ளவர்கள் உணர்கிறார்கள். இந்த நுண்ணுணர்வு ஒரு வாசலென அவர்களைப் பிளந்து அவர்களுள்ளே ஒரு அமானுஷ்ய சக்தி பாய்வதற்கு வழியாகிறது. இந்த உணர்வுதான் உண்மையான தியானம்.

இந்த அடிப்படை பற்றி இங்கு பேசவேண்டிய அவசியம் இருக்கிறது. நாம் மேற்குறிப்பிட்ட. நுண்ணுணர்வைக் கலாச்சார மேதாவிலாசத்திலிருந்து பிரித்துவைத்துப் பலர் பேசுவதாகவே எனக்குப் படுகிறது. மேல் நாட்டினர் கூட இத் தவறைச் செய்கின்றனர். இதன் நேரடி விளைவை உலகின் தலை சிறந்த கலைஞர்களின் வாழ்வில் காணும் போது திடுக்கீடு உண்டாகிறது. கையெழுத்துக் கூடக் போடத் தெரியாத ஒரு கிழவியை எனக்குத் தெரியும். ஆனால் பிக்காஸோ போன்ற அற்புதமான மேதைகளினாலேயே சாதிக்க முடியாமல் போன ஒன்றை இவள் சாதித்திருக்கிறாள். இருந்தும் தன் குடும்பத்திற்குக் கூட தன்னைக் காட்டிக் கொள்ளாமல்தான் இவள் இன்று வரை இருக்கிறாள். எந்த முடிவைச் சாதிக்க முடியாமல் ரஷ்ய நடனமேதை வாஸ்லாவ் நிஜின்ஸ்கியும், ஓவியர் வின்சன்ட் வான்கோவும் ஏன், இன்னும் தன் தத்துவக் கருத்துக்களின் மூலம் சிந்தனையுலகை ஒளிர வைக்கும் மகா மேதை பிரெடெரிக் நீஷும் பைத்தியமாகி இறந்தார்களோ அந்த முடிவை கையெழுத்து வைக்கக் கூட முடியாத ஒரு அநாமதேயம் சாதித்துள்ளதை சந்தேகமற நான் கண்ட போது "கலாச்சாரம் என்றால் என்ன?" என நான் திடுக்கிட்டுக் கேட்டுக் கொண்டேன். இதற்குப் பதில் உருவற்று ஒரு தூரத்து அரையிருள் வெள்ளொளி போன்றே புலப்படுகிறது. இருந்தும் திட்ட வட்டமாக அது புலப்பட்டு விட்டது என்று சொல்லத்தக்க சொல்வசப் பட்ட வெளியீட்டில் அது திடீரென 'பொய்' ஆகிறது. இருந்தும் சிலர் வெளியிட்டுச்

சொல்கிறார்கள்: டால்ஸ்டாயைப் போல ("What is art?") ஜோன் ரஸ்கினைப்போல. சொன்ன உடனேயே அவர்களே வெட்கப் படத்தக்க பொய் என நிரூபிக்கப் படுகின்றன அவர்களது கூற்றுக்கள். ஏனெனில், தனி மனிதனை வற்புறுத்தும் அளவுகோலாகவே அவர்கள் கூற்றுக்கள் பிறக்கின்றன. எனவே தான் அடிப்படையான ஒரு அம்சம் மனிதத்துவத்துக்கு அப்பாற்பட்ட ஒன்றென உள்ள போது, அது உணரப்பட வேண்டுமேயன்றி பேசப்படவேண்டியதல்ல. இவ்விடத்தில் ஒரு 'அநாமதேய'— ஆனால் பெரிய ('பூரண' என்ற பொருளில் வைத்துக் கொள்ளுங்கள்) மனிதர் சொன்னது நினைவுக்கு வருகிறது: "பார்ப்பான், பறையன் என்று இரண்டு ஜாதிகள் உண்டு. பார்ப்பான் சத்தியத்தைப் பார்ப்பவன்—அதுவேயாகி நிலைத்தவன். பறையன் சத்தியத்தைப்பற்றி அது அப்படிப்பட்டது இப்படி இருக்கும் என்றெல்லாம் வாய்ப்பறை அடிப்பவன்.'' சத்தியத்தின் சாயலில் பிறக்கும் கலைப்படைப்பு விஷயத்திலும் இதே சூத்திரத்தைத்தான் பிரயோகிக்க வேண்டுமோ என்று டால்ஸ்டாய் போன்றோரின் பிற்கால இலக்கியத் தோல்விகளும், அவரது இன்னொரு படிமமான இன்றைய அரசியல் பண்டித 'ஞானி'களின் முயற்சிகளும் எண்ண வைக்கின்றன.

இவர்கள் நாம் குறிப்பிடும் தனி மனிதனை பூச்சாண்டி எனக் கண்டு குளறுகின்றனர். தன்னை மீற வேண்டிய தேவை, சிருஷ்டி வேகம் என்பதெல்லாம் தனிமனிதனின் உணர்வுகள்; சமூகத் தேவைகளல்ல. இவற்றை நாடுகையில் சமூகமும், சமூகத்தின் படிமமான தனது இயற்கையும் குறுக்கே நிற்கக் கண்டு தனிமனிதன் தன்னையே துறக்கிறான். இந்தத் தற்துறவு அவனது சரீரமான சமூகத்தையும் பாதிப்பது ஒரு தவிர்க்க முடியாமை. இதைக் கண்டு சமூகம் கதறத்தான் செய்யும். கதறட்டும். ஆனால் கலாசார நிபுணர்களும் சேர்ந்து கதறும்போதுதான் விஷயம் பரிதாபகரமாகிறது. அதில் ஒரு அடிப்படைத் தெளிவின்மை தெரிகிறது. இத்தெளிவு இந்நிபுணர்களுக்கு உண்டாகாவிட்டால், கலாச்சார சக்திகளான கலைத்துறையே க்ஷீணித்து அழிவடையும்.

எப்படி, ஒரு சமயத்தில், அல்லது ஒரு குறிப்பிட்ட 'கலாச்சார குழு' விற்குள் பெரிய மனிதர்கள் எழுதுவது; செய்வதெல்லாம் உயர்ந்தவை என்று கருதப்பட்டனவோ (பரிதாபகரமாக இந்நிலை இன்றும் நம்மிடையே உள்ளது.—உதாரணமாக 'கடவுள்' சம்பந்தப்பட்டவர்கள் பலர் இயற்றிய யாவற்றையுமே—'நீதி'க்குக் கட்டுப்பட்டு அதை விளம்பரம் செய்ய எழுதியவர்கள் யாவரையுமே இன்றும் இலக்கிய பீடத்தில் வைத்திருக்கிறோம்.) அதே போலஉயர்ந்தவகையாகக் கலைத்துறை, இலக்கியத்துறைகளில் சாதிப்பவர்களைப் பெரியமனிதர்கள் என்று சொல்லும் ஆபத்து இன்று நெருங்கிவிட்டது.

இருபதாம் நூற்றாண்டின் ஓவியத்துக்குச் சமன் (=) அடையாளம் போட்டு 'பிக்காஸோ' என்ற பெயரைத்தான் எழுதலாம்: அதே சமயத்தில் சாதாரண மனிதரையும் மீறிய தைரியம், குழந்தைமை முதலியவையும் இவனிடம் இருந்தன என்பதுஉண்மையே. ஆனால் இவற்றைக் கொண்டே இவனைப் பெரிய மனிதன் (Grand homme) என்று சொல்வது அந்தப் பிரயோகத்துக்கு உரிய மதிப்பையே குலைப்பதாகும். ஏனெனில், சாதாரண மனிதனைவிடக் கூடுதலான, 'டோஸ்' என்றுசந்தேகிக்கத்தக்க அளவு தன்னிரக்கம் இவனிடம் இருந்தது. இதன் விளைவான பல அபத்தங்களை இவன் வாழ்க்கைச் சரிதத்தில் காணலாம். சுயநலம், தன்னுடைய அபிப்பிராயத்தை ஏற்காதவர்கள் மீது ஆத்திரம், தன்னை எல்லாரும் காதலிக்க வேண்டும் என்ற அவா, இளமை போகிறதே என்று பயம், தன் குழந்தைகளின் ஆடைகளைத் திருடிக்கொண்டால் அவர்களின் இளமையைத்தான் பெறலாம் என்ற மேனாட்டு மூடநம்பிக்கை, இன்னும் எத்தனையோவிதமான மூட நம்பிகைகள் (இவனுடைய கம்யூனிஸமும் இந்தவகையான ஒரு நம்பிக்கை என்றே தோன்றுகிறது. ஏனெனில், எந்த தர்க்கத்துக்கும் இவன் இதுவிஷயத்தில் செவி சாய்க்கவில்லை) முதலிய எவ்வளவோ கோளாறுகள் இவனிடம் இருக்கின்றன. மொத்தத்தில் இவனது மேதையையும், திறமையையும் விட்டுத் தனித்தால் இவன் அரக்கத்தனமானவனென்றே தோன்றும்.

சொல்லின் மூலம் தங்களை வெளிப்படுத்துவோர்களிலும் இப்படிக் குறைபாடானவர்கள் இருக்கிறார்கள். ஹென்றி மில்லர் தனது பிரெஞ்சு நண்பன் கொன்ரூட் மொறிக்கான் என்பவனைப்பற்றி எழுதியுள்ள ஒரு பகுதி ('பிக்ஸ்சர்' என்ற நூலிலிருந்து) 'டெவில் இன் பரடைஸ்' என்ற தனிநூலாக வெளிவந்துள்ளது. மொறிக்கான் ஒரு அற்புத ஜோதிடன். எவனையும் பார்த்தே அவனது லக்னம், பிறந்த தேதிமுதலியவற்றைச் சொல்லத்தக்க திறமையுள்ள இவன் பேசும் போது கவியாகவே மாறிவிடுவானாம். மில்லர் தனது அதி அற்புத வசன நடைகளில் சில பகுதிகளை மொறிக்கானின் சம்பாஷணையை வர்ணிப்பதிலேயே சாதித்துள்ளான். பழைய நாகரீகங்களும், கலாச்சாரங்களும், பாபிலோன், எகிப்து, கிரீஸ், ரோம் என மொறிக்கானின் சம்பாஷணை மூலம் தங்கள் சவக்குழிகளை நீத்தெழுந்தன. இவனை மில்லர் டெவில் என்கிறான். காரணம்? இம்பிரஷனிஸ்டுகளுடன் ஓவியத்துறையிலேயே ஈடுபட்டிருந்த இவனால் இயற்கையைக் கிஞ்சித்தும் உணர முடியவில்லை. ஆனால் ஓவியங்களை ரஸிக்க முடியும். நன்றாகப் படங்கள் போடமுடிந்த இவனுக்கு குழந்தைகளைக் கண்டால் அருவருப்பு. அதுமட்டுமல்ல குழந்தைகள்மீது காமம் கொள்கிற பிலோபீடியா என்ற மனநோய்பிடித்த ஒரு அரக்கன்.

இந்த விபரங்களின் மூலம் கலையுணர்வோ, கலாச்சார உணர்வோ மனிதனின் உன்னதத தன்மையுடன் சம்பந்தமுள்ளதா என்று கேட்கத் தோன்றுகிறது.

# பண்டைய கேரளம்*

மலையாள இலக்கிய, மொழி வரலாற்றைப் பற்றிச் சுமார் இருபது புத்தகங்கள் எழுதியுள்ள பேராசிரியர் இளங்குளம். குஞ்ஞன் பிள்ளை, கி.பி. 5-ம் நூற்றாண்டு கேரள சமூக, மொழி இலக்கிய நிலைகளைப்பற்றி "பண்டைய கேரளம்" என்ற புத்தகத்தில் ஆராய்கிறார். கி.பி. 5-ம் நூற்றாண்டுக கேரளம், வேறு வார்த்தைகளில், அக்காலத்தில் சேரர் ஆட்சிக்குட்பட்டிருந்த தமிழகப் பகுதி என ஆவதால், இது ஒரு பகுதி தமிழகத்தின் நிலை பற்றியே ஆகும். தொடர்ந்து, இந்நிலை தமிழகம் முழுமைக்குமான உண்மை எனவும் பெரும்பாலும் கொள்ளவேண்டும். சங்கத் தமிழ் நூல்களின் ஆராய்வை ஆதரித்தே இப்புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது. இதில் காணப்படும் விஷயங்கள்: 1) தமிழகத்தின் இயற்கையமைப்பு, 2) சங்க காலத்தில் கேரளம், 3) பண்டைய தமிழகத்தில் போர், 4) கேரளத்தின் முதல் மன்னன் (பெருஞ் சேரலாதன்) 5) ஏழில மலையும் கொல்லி மலையும், 6) கேரளத்தின் பண்டைய நகரங்கள் (முசிறி, வஞ்சி, தொண்டி, மாந்தை, வாகை, பந்தர், ஆய்குடி), 7) களவும் கற்பும், 8) வருணாசிரமத்தின் பிடியில் கேரளம், 9) சங்க இலக்கியங்களின் காலம், 10) யவனர்களும் சங்க காலமும்.

இது ஒவ்வொரு தமிழ் இலக்கிய, சரித்திர மாணவனும் (பள்ளி மாணவனைச் சொல்லவில்லை) கட்டாயம் படிக்கவேண்டிய புத்தகம். காரணங்கள் பல. தமிழன் சரித்திரம், தமிழ் இலக்கிய சரித்திரம் எழுதும் தமிழ்ப் புலவர்களின் சுய பெருமைகள் உண்ட மயக்கம் குஞ்ஞன் பிள்ளைக்கு இல்லை (மலையாளம்தான் தமிழ் மொழியின் தாய் என்ற கட்சியைச் சார்ந்த உள்ளூர் பரமேஸ்வரய்யர் என்ற மலையாளக் கவிஞருக்கு எதிர்க்கட்சியாளர் குஞ்ஞன் பிள்ளை, கபிலர், பரணர், காக்கை பாடினியர், இளங்கோ அடிகள் ஆகியோரையெல்லாம் கேரளக் கவிஞர்களாக உரிமை கொண்டாடுவதில் பெருமை கொள்பவர் குஞ்ஞன் பிள்ளை, என்ற உண்மைகளை, குஞ்ஞன் பிள்ளையைப் போருக்கு அழைக்கும் 'தமிழ்ப்புலவர் பெருமக்கள்' ஞாபகத்தில் வைத்துக்கொள்வது நல்லது.) உணர்ச்சி வயப்பட்டு கூச்சல் போடும் 'தமிழ்ப் புலவர் பெருந்தகைகளுக்கு' மாறாக விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சியில் உண்மை காணும் நாட்டம் இப்புத்தகம் முழுதும் விரவிக் கிடக்கிறது. கனகசபைப் பிள்ளை; மு. ராகவய்யங்கார், உ. வே. சாமிநாதய்யர், சீனிவாசய்யங்கார், எஸ். வையாபுரிப் பிள்ளை என்று வளர்ந்து, எஸ். வையாபுரிப் பிள்ளையுடன் நின்றுவிட்ட விஞ்ஞான பூர்வமான ஆராய்வாளரின் மரபைச் சார்ந்தவர் குஞ்ஞன் பிள்ளை. தன்முன் சென்றவர்களுடன் மாறுபடும் பொழுது, ஆராய்ச்சி பூர்வமாக, தக்க ஆதாரங்களுடன் மாறுபடுகிறார். மொழி பெயர்ப்பாளர், பேராசிரியர் செ. ஜேசுதாசன் சொல்வதுபோல, "இந்த அளவுக்கு இலக்கியத்தை அதன் சமுதாயப் பகைப் புலத்தில் வைத்து ஆராய்ந்தவர்கள் தமிழில் இல்லை". இதை அடுத்து, இவ்வார்த்தைகளை மாற்றி, தமிழ் சமுதாயத்தை அதன் இலக்கியத்தின் பகைப்புலத்தில் ஆராய்ந்தவர்கள் தமிழில் இல்லை என்று சொல்வதும் உண்மையும், நாணயத்தின் மறுபகுதியும் ஆகும்.

இதில் தெரியவரும் விஷயங்கள்:

மொழி வளர்ச்சி வரலாற்றில், மொழி வடிவம் பெறும் நிலை அபப்ரம்ச நிலை "வழக்குத் தமிழ் ஆரிய மொழிக் கலப்பினால் உருவ அமைப்பில் மாற்றமடைந்த 6-ம் நூற்றாண்டின் கடைசிப் பகுதிக்கு முந்திய காலம் தமிழின் வடிவுறுங்காலம் (அபப்ரம்ச நிலை)" (பக்கம்—218, 219). இக்காலத்தில் எழுதப் பெற்றவைதான் சங்க இலக்கியங்கள். இவற்றில் சிறந்தவையே நிலைபெற்று நமக்குக் கிடைத்துள்ளன. வடிவுறுங்காலத்திய தரமற்ற நூல்களும், இக்காலத்தில் வலுவடைந்து வந்த வர்ணாசிரம தர்ம எழுச்சி காரணமாக, சமண, பௌத்த நூல்களும், வடிவுறுவங் காலத்திற்கு முந்திய நூல்களும் (வேகமான மொழி மாற்றத்தின் காரணமாக) அழிவுற்றன. மலையாள மொழி (அதாவது சேர நாட்டுப் பகுதியின் வழக்குத் தமிழ் சிதைந்து ஆரியக் கலப்பினால் உருவாகிக் கொண்டிருந்த மலையாள மொழி)—14-ம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை அபப்ரம்ச நிலையைத் தாண்டவில்லை. இக்காலத்திய மலையாள நூல்கள் பெரும்பாலும் வழக்கிழந்துவிட்டன-மொழி வடிவுறுங்காலத்தில் எழுதப்பட்ட காரணத்தால் (பக்கம் 218-219).

சங்க காலத் தமிழ்நாடு, சாதி பேதமற்ற சமுதாயமாகும். தொல்காப்பியம் முழுதிலும் வர்ணாசிரம தர்மத்தைப் பரப்புவதற்கான முயற்சியைக் காணலாம் (ப—121). இளம் பூரணர் முதலியோர் வரலாற்றுண்மைகளைப் புரிந்துகொள்ளாமல பலவாறு உரை எழுதியிருக்கின்றார்கள் (ப-122) தொல்காப்பியம், நாட்டிய சாஸ்திரம், காம சூத்திரம் ஆகியவற்

---

* பண்டைய கேரளம்—பேராசிரியர் இளங்குளம் குஞ்ஞன் பிள்ளை. தமிழில்; பேராசிரியர் செ. ஜேசுதாசன். வெளியீடு; தமிழ்ப் புத்தகாலயம், சென்னை—5. விலை ரூ. 4-50.

றைப் பின்பற்றி எழுதப்பட்டது—உதாரணம்: தொல்காப்பியம் குறிப்பிடும் காம நிலைகள் ஒன்பது. இவையுடன், எட்டுச் சுவைகள். பத்துக் குற்றங்கள் ஆகிய எல்லாமே நாட்டிய சாஸ்திரம், காமசூத்திரம் ஆகியவற்றிலிருந்து பெயர்த்து எடுக்கப்பட்டவை. காம நிலைகள் பலவற்றிற்குச் சங்க இலக்கியங்களில் உதாரணங்கள் காணப்படவில்லை. வர்ணா சிரமத்தைப்பற்றித்தொல்காப்பியம் கூறுவதுபோல், காம நிலைகள்போல், பல செய்திகள், இலக்கியங்களில் காணப்படாதவை. ஆனால், தொல்காப்பிய ஆசிரியர் "இருக்கவேண்டும்" என்று விழைந்து புகுத்தப்பட்டவை. இதனால்தான் உரையாசிரியர்கள் "உதாரணங்கள் வந்தவிடத்தில் காண்க" என்று சொல்லவேண்டி வந்தது. தொல்காப்பியம் கூறும் சூத்திரங்கள் பலவற்றை சங்கப் புலவர்கள் ஆதரிக்கவில்லை (ப—172) 5-ம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல், கபிலர், பரணர் காலம் முதல்தான் வடமொழி ஆட்சியும், ஆரியர் கருத்துக் குவியல்களும் தென்னாட்டில் பரவத் தொடங்கின. வடமொழி கவிதை மரபுகளையும் அவர்கள் ஏற்றுக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் அகப் பாடல்களில் பொதுவாகக் காணப்படும் முக்கியமான மரபுகளும் குறியீடுகளும் அக்கால சமூக வாழ்க்கையிலிருந்து விளைந்தவைகளே. அதனால் அகப் பாடல்களின் தோற்றம் ஆரிய மொழியோடும் ஆரியர்களோடும் உள்ள உறவு நெருங்குவதற்கு முந்தியது. இவற்றுள், ஆதியில் எழுந்த கவிதைகளெல்லாம் அழிந்து போயிருக்க வேண்டும் (ப. 171-172).

வர்ணாசிரம தர்மத்தை நிலைநாட்ட, அப்போது பரவிக் கொண்டிருந்த பௌத்த சமண சமயங்களை எதிர்க்கவேண்டி வந்தது. இதற்கு சமூகத்தில் பலம் பெற்ற அரசர்கள் வணிகர்கள், செல்வர்கள் ஆகியோரின் தயவு வேண்டியிருந்ததால் அதுவரை சாதி வேறுபாடற்றிருந்த அவர்கள் 'மேலோர்' எனச் சொல்லப்பட்டனர். இதற்கான தீவிர முயற்சிகளை தொல்காப்பியத்தில் காணலாம் (ப 121, 184-185) பின்னர் அந்தணரும், அரசரும் மாத்திரமே மேலோராயினர் (இளம் பூரணர் உரை. 26-ம் சூத்திரம்). பின்னர் இதுவும் கெட்டு அந்தணர் மாத்திரமே உயர்ந்தோர் ஆயினர்—(இளம் பூரணர் உரை 36-ம் சூத்திரம்)—(ப. 200). இருவகை அந்தணர் இருந்தனர் (ப. 180). வர்ணாசிரம பிரசார சௌகர்யங்களுக்காக, கற்றோரான புலவர்கள் அந்தணராக்கப்பட்டனர். உதாரணம்: கபிலர். கபிலர், பாணர் இனத்தைச் சேர்ந்தவர். (ப. 196). ஆனால் கபிலர் இறைச்சி உண்பவர் (ப. 50). செம்புற்றிலுள்ள ஈசல்களை நல்ல மோரோடு கலந்துண்டாகிய புளிங்கறியிலும் கபிலருக்குப் பெரு விருப்பம் (புறம். 119). இவ்வாறு பார்ப்பனர் ஆனவர் வேளாப் பார்ப்பனர் (வேள்வி செய்யாத பார்ப்பனர்) எனப்பட்டனர். (ப. 181-182) கேரளத்தின் தலை சிறந்த புலவரான இளங்கோ அடிகள் குறவன் (ப. 198-199). வர்ணாசிரமத்தின் பிரசார அம்சமாகத்தான் பால்ய விவாகம் ஏற்படுத்தப்பட்டது. சங்க காலத்தில் உடன்போக்கு நடத்துகின்றவர் பெரும்பாலும் மடந்தையரும் (19—வயது முதல்) அரிவையருமே (25—வயது முதல்) (ப. 200-201). ஆனால் நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர் அகப்பாடல்களின் தலைவியருக்கு 12-வயதும் தலைவனுக்கு 16-வயதும் ஆக்கிவைக்க விரும்புகிறார்கள். (ப. 200). வர்ணாசிரமத்துக்கு எதிர்ப்பு எழாதிருக்கக் கீழோருக்குக் கல்வி மறுக்கப்பட்டது. உயர்ந்தோர் மாத்திரமே கல்வி கற்கலாம் என்பது தொல்காப்பியக் கருத்து-பொருள் 26 (ப. 199). ஆதியில் திருமணத்திற்கொன்றும் சடங்கிருந்ததில்லை என்றும், காந்தர்வத்தில் பொய்யும் களவும் உண்டாகி விட்டன என்றும், ஆரியர் வருகைக்குப் பின்தான் இந் நிலையைச் சீர்திருத்த மணமக்களைக் கலவாமல் பெற்றோர்கள் வலுக்கட்டாயத்தின் பேரில் மணமுறை ஏற்பட்டது. பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்.

"ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்பது தொல்காப்பிய சூத்திரம் (ப. 120) மாமூலனாருக்கும் ஆரியக் கொள்கைகளைப் பரப்பியதில் பெரும் பங்குண்டு (ப. 68) வருணாசிரமத்துக்கு அடிப்படை போட்டவர்களும் 7—ம் நூற்றாண்டில் தொடங்கிய பக்தி இயக்கத்துக்கான சூழ்நிலையை உருவாக்கியவர்களும் மாமூலனார் போன்ற சமயத் தொண்டர்களே (ப. 68). வடக்கிருத்தல், உத்திராகமனம் என்னும் ஆரியப் பண்பாடு. தொல்காப்பியச் சூத்திரங்கள் எந்தெந்த வடமொழிகளைச் சார்ந்து இயற்றப்பட்டன என்ற சான்றுகளின் ஆதாரத்தில், வர்ணாசிரம தர்மப் பிரசாரத்திற்கென்று தென்னாடு வந்து, 30,40 ஆண்டுகள் தங்கியிருந்த மேதா விருத்ததேரோ தொல்காப்பியம் இயற்றியிருக்கவேண்டும் என்ற முடிவுக்கு குஞ்ஞன் பிள்ளை வருகிறார் [ப. 230] மேலும் வடமொழி அலங்கார நூல்கள் பலவற்றையும் நன்கு கற்றுணராதவர்களுக்குத் தொல்காப்பிய பொருளதிகாரச் சூத்திரங்கள் பலவும் பொருள் விளங்காப் புதிராகவே இருக்கும் என்றும் கூறுகிறார் [ப. 230].

அகநானூற்றைத் தொகுத்தது உக்கிரப் பெரு வழுதியின் காலத்திய உருத்திரசன்மன் அல்ல. இதைப் போன்றே, நற்றிணை குறுந்தொகை, ஐங்குறு நூறு ஆகியவை, முறையே பன்னாடு தந்த பாண்டியன், பூரிக்கோ, யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரா லிரும் பொறை ஆகியோர் காலத்தில் தொகுக்கப்பட்டன அல்ல. மாறாக, அகப்பாடல்கள் எல்லாமே, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு எல்லாமே, ஒருவரால் ஒரே காலத்

தில் தொகுக்கப்பட்டவை [ப. 65]. இதே போன்றுதான் புறநானூறும். அகநானூற்றிலும், புறநானூற்றிலும் இடைச் செறுகல்கள் அதிகம். புத்த, சமண மதங்களைத் தழுவிய அரசர்களைப் பற்றிய பாடல்கள் நீக்கப்பட்டு, வருணாசிரமக் கொள்கைகள் பழையன என நிலைநாட்ட, நூல் எண்களை நிரப்ப, இடைச் செருகல்கள் நிறையப் பயன்படுத்தப் பட்டுள்ளன [ப. 66, 67, 197, 225, 226, 267].

சிலப்பதிகாரமும், அப்பர், சம்பந்தர் தேவாரமும், 7-ம் நூற்றாண்டைச் சேர்ந்தனவே. மொழி வேற்றுமைக்குக் காரணம், தமிழின் பிராந்திய வேறுபாடுகள். சேர பாண்டிய நாட்டுத் தமிழ், தொண்டை மண்டலத் தமிழ் வளர்ச்சிக்குப்பின் தங்கியன [ப. 225] ஆரிய மதம், ஆரியமொழி, ஆரியக் கருத்துக்கள், தமிழகம் முழுதும் ஒரே சமயத்தில்பரவவில்லை. முதலில் தொண்டை நாட்டில், பின்னர் சோழ பாண்டி நாடுகளில், கடைசியாக சேர நாட்டில். இப்பரவு முறையின் வேறுபாடு பொது மக்களின் தமிழ்ப் பேச்சில் காணப்பட வேண்டும். அப்பர், சம்பந்தர் காலத்தில் சேர, பாண்டிய தேசங்களில் வழங்கிய தமிழ் சங்கத் தமிழாக இருக்கவேண்டும். ஆனால் இவர்கள் பாடியதோ, இவர்களை அடுத்தோ, அல்லது முன்பாகவோ, வாழ்ந்த பூதம், பொய்கை, பேய் ஆகிய ஆழ்வார்களைப்போல், தொண்டை மண்டலத் தமிழில் [225-226].

குறிஞ்சி, பாலை, நெய்தல் பாடல்களைப் போன்று அழகுடையன அல்ல முல்லைப் பாடல்கள். வரலாற்றுச் சிறப்புடையனவும் இவற்றில் சிலவே [ப. 160]. சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் யவனர் எல்லாம் ரோம் நாட்டினர் அல்லர். சீரியர்கள், யூதர்கள், அராபியர்கள், இப்படியாக எல்லோரையுமே யவனர் என்றே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன [ப. 239].

சங்க காலத்திய தமிழ்ப் பெண்கள், மிக விரும்பி உடுத்தியது, இலைகளும் பூக்களும் கோர்த்துத் தயாரித்த தழையுடைகளையே—பட்டாடைகளும் பஞ்சாடைகளும் இருந்த போதிலும் (ப. 210).

தமிழ் அரசர்கள் வட இந்தியப்படையெடுப்பெல்லாம் புனை கதைகள். கரிகாலன் காவேரிக்கு அணைகட்ட மறுத்த முகரி அரசன் [கி.பி. 600] கண்ணைத் தோண்டினான் என்பதும், செங்குட்டுவன், கனக விசயன் என்ற பால அரசர் [கி.பி. 800] தோள்மேல் கல்லை ஏற்றினான் என்பதும், அவன் இமய மலையில் வில்லடையாளம் பொறித்தான் என்பதும் கட்டுக்கதைகள். ஏனெனில், இடையில் வாகாடர்கள், குப்தர்கள், சாதவாகனர்கள் ஆகியோர் ஆட்சி ஓங்கி இருந்ததால் சேரரோ, சோழரோ பாண்டியரோ, இவர்களையெல்லாம் தாண்டி, கங்கைக்கும், இமயமலைக்கும் செல்வது முடியாத காரியம் [க. 219-220].

அக்காலக் குடவோலை, இக்கால வாக்காளப் பெருமக்களின் வாக்குச் சீட்டு, இதை யாராவது கேலி செய்வார்களோ? சங்கப் புலவர் மருதனிளநாகனார் இதைக் கேலி செய்கிறார். [அகம் 77] பொருள் தேடச் செல்லும் தலைவனைப்புலவர்பயமுறுத்துகிறார்; "நெஞ்சே சொந்த முயற்சியால் பொருள்தேட, நெருங்க முடியாத காட்டு வழியே செல்லுதல் நல்லதென்று பின்னால் நின்றுகொண்டு ஆலோசனை சொல்வாயானால் அது மிகக் கடுமையான ஆலோசனை. இடி முழுங்கும் மேகம் மழை பெய்யாமல், வெப்பம் மிகுதலால் எங்கும் குடிகள் தங்கள் ஊர்களிலிருந்து பெயர்ந்து போய், பாழாய்க்கிடக்கும் பாலை நிலத்தில் உயிர் போகப் போராடி வெற்றி அடைந்த வீரர்களின் குடல்களை—கயிற்றால் சுற்றிக் கட்டிய குடத்தின் மேலிட்ட முத்திரையைப் பரிசோதித்து உள்ளிருக்கும் குடவோலையை வணிக சங்கத்தார் எடுப்பதுபோல—பருந்துகள் பயங்கரமாகக் கொத்திப்பிடுங்கி வெளியே எடுப்பது மிகச் சாதாரணமான காட்சி" [ப. 152].

---

இன்னும் சில சுவாரசியமான உதிரிச் செய்திகள்: 1971-ம் வருஷத்திய தமிழக வாழ்க்கைக்கு, மேற்கோள் காட்டி நியாயம் கற்பிக்கவேண்டுமானல் அதுவும் சங்க இலக்கியங்களில் கிடைக்கும். சங்க காலத் தமிழ் வாழ்க்கைதான் இன்றையத் தமிழ் வாழ்க்கையும். இரண்டு சிறு உதாரணங்கள் மாதிரிக்கு: [இதெல்லாம் சுவரொட்டிகளில் அச்சிட மிகப் பயனுள்ளவையாக இருக்கும்] எல்லாத் தொழில்களையும்விட மிகமிக உயர் வான தொழில் பனை ஏறுதல் ஏனெனில் தேவர்களுக்குப் படைக்கும் கள் கிடைப்பதால் [ப. 213]. பரத்தமை எல்லோருக்கும் பொருந்துவது என்பது தொல்காப்பியர் கருத்து—பொருள். 224 [ப. 162] "பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்" [தலைவி விலக்காகி 12 நாளும்] பிரிதல் கூடாது என்பதே கட்டாயம் (Rhythm Method ஐப்பற்றி தொல் காப்பியருக்குத் தெரிந்திருக்கிறது). தம் நாடு விட்டு அயல் நாடுகளில் ஆறுகளுக்கும், குளங்களுக்கும் பரத்தையோடு உல்லாச யாத் திரை செய்வதில் தொல்காப்பியருக்குத் தடை ஏதும் இல்லை—பொருள். 191 [ப. 162] நிலக்கிழார்களுக்கும், செல்வர்களுக்கும், மனைவி மாரும், வைப்பாட்டிகளும் மாத்திர மல்ல, கணிகையரும் வேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து பெரும் பொருள் கொடுத்து மணம் செய்த இரண்டாவது மனைவியை முதல் மனைவி, விளக்கும், நீறை நாழியும் ஏந்தி வரவேற்க வேண்டும் என்றும் [பொருள் 172], சம அந்தஸ்து கொடுத்து கௌரவிக்கவேண்டும் என்றும் [பொருள். 174] தொல்காப்பியர் கூறுகிறர் [ப. 170]. இவர்களைப்பற்றியும், புலவி, ஊடல்களைப் பற் றியும் விரிவாக விளக்கிப் பல சூத்திரங்களைத் தொல்காப்பியர் எழுதியிருக்கிறர். இவற்றின் பல பகுதிகளும் காம சூத்திரம் [வாத்ஸ்யா யனர்], நாட்டிய சாஸ்திரம் [பரதர்] ஆகிய வற்றிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவை [ப. 170].

இப்படியாகப் பல விஷயங்கள், நமக்கு, நம் தமிழ் 'அறிஞர்கள்' சொல்ல மறுத்த, மறைத்த விஷயங்கள், அவர்கள் தாமாகவே பார்க்க மறுத்துக்கொண்ட விஷயங்கள் பல நமக்குத் தெரிய வருகின்றன.

நான் முன்னமே சொன்னவாறு, இவை யெல்லாம் நாம் நம்மவரிடமிருந்து எதிர் பார்க்க முடியாதவை. இது குஞ்ஞன் பிள் ளைக்குத் தெரியும் அவர் கூறுகிறர்.

"சரித்திரப் பார்வையோடு, சங்க இலக்கி யங்களை ஆராய முயற்சி செய்த வேறு இரண்டு புலவர்கள் கெ. என். சிவராஜபிள்ளை யும், எஸ். வையாபுரிப்பிள்ளையும் ஆவார்கள். ஆனல் அவர்களுடைய நூல்கள் ஒன்றையும் தமிழ்ப் புலவர்கள் வாசிப்பதில்லை.

"அபிமுகே மயி ஸம்ஹ்ருத மீக்ஷிதம்
ஹஸிதமன்ய நிமித்த க்ருதோதயம்"

என்று சாகுந்தலத்திலும்,

"யான் நோக்குங்காலை நிலனேக்கும், நோக்காக்கால்
தான் நோக்கி மெல்ல நகும்"

என்று குறளிலும் இருந்தால், உடன், காளிதாஸன்தான் குறளிலிருந்து கடன் வாங்கி இருக்கிறன் என்று அவர்கள் முடிவு கட்டி விடுவார்கள் [ப. 191-192].

குஞ்ஞன் பிள்ளையின் புத்தகத்தைப் பற்றி நன்கு தெரியவைக்க வேண்டும் என்பதற் காகவே கொஞ்சம் விரிவாகவே மேற்கோள் கள் காட்டியிருக்கிறேன். இப் புத்தகத்துடன் ஒரு தொடர்ந்த சம்பாஷணை நிகழ்த்துவது என்பது இத் தலைமுறை தமிழ் 'அறிஞர்' களுக்கு இயலாத காரியம். குஞ்ஞன் பிள்ளை சொல்வதுபோல "தமிழ் நாட்டின் அடுத்த தலைமுறை ஆழமாகச் சிந்திக்கவேண்டியது இது" [ப. 192].

நம் முத்தமிழ்க் காவலர்களுக்கு குஞ்ஞன் பிள்ளையின் மொழி ஒன்றும் புரியாது. ஆகவே அவர்கள் செய்யக்கூடியது ஏதாவது ஒரு 'மாண்புமிகு'வின் தலைமையில், வீரமிகு தமிழில், கூச்சல் மிகுக்குரல் எழுப்பி, கோஷம் மிகு கண்டனங்களையும், தீரம்மிகு தீர்மானங் களையும் இனிமை மிக நிறைவேற்றலாம்.

நாம் செய்யக்கூடியது, குஞ்ஞன் பிள்ளையை நமக்கு அறிமுகப்படுத்திய செ. ஜேசுதாசனுக்கு நன்றி கூறல்.

—வெ. சாமிநாதன்

---



Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy, No. 1, Devadi Street, Madras-4